[6th February 1959

SRI A. VEDARATHNAM : சுதேசிய நிர்மாணத் திட்டத்தில் ஒன்றாகிய இயற்கை வைத்தியம், அதாவது naturopathy முறையை அமுலுக்குக் கொண்டு வருவதற்கு முயற்சி நடைபெறுகின்றதா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்பொழுது ஹோமியோபதி, நாச்சுரோபதி ஆகிய எல்லாப் பதிகளையுமே ஓரளவு உபயோகிக்கலாம் என்று தோன்றுகிறது.

*Cotton Textile Enquiry Committee*

* 46 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Industries be pleased to state whether the Government have any proposal to set up an autonomous Corporation to take over the closed textile mills as recommended by the Cotton Textile Enquiry Committee?

THE HON. SRI R. VENKATARAMAN : No, Sir.

* 47 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Industries be pleased to state the steps taken by the Government to implement the recommendations of the Textile Enquiry Committee constituted by the Government of India for the better functioning of textile mills?

THE HON. SRI R. VENKATARAMAN : The Committee which was set up by the Government of India have submitted its report. The Government of India have communicated their decisions on the recommendations of the Committee to this Government. They are being examined.

SRI N. K. PALANISAMI : இந்த மாதிரி சரியான முறையில் நடத்த முடியாமல் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கும் மில்களை, சர்க்காரே கார்ப்பரேஷன் ஏற்படுத்தி நடத்த முன் வருமா ?

THE HON. SRI R. VENKATARAMAN: கமிட்டி செய்த சிபாரிசை மத்திய சர்க்கார் நிராகரித்துவிட்டது. கார்ப்பரேஷன் தேவை இல்லை என்று முடிவு செய்துவிட்டார்கள்.

SRI T. T. DANIEL : May I know, Sir, the main recommendations of the Committee?

THE HON. SRI R. VENKATARAMAN : The report is available in the library, Sir.

SRI N. K. PALANISAMI : இதில் இந்த சிபாரிசு முக்கியமானது. "ரேஷனலிஸேஷன்" முறை (அதாவது சிக்கனச் செலவு) விஷயமாக 15-வது லேபர் கான்பரன்சின் முடிவு பிரகாரம் அமுல்ாக்கப் போகிறார்களா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : "ரேஷனலிசேஷன்" இன்னும் உற்பத்தி அதிகரிப்பதற்கான் முயற்சி இவைகளைச் செய்யும் பொழுது வேலை இல்லா திண்டாட்டம் ஏற்படாமல் இன்னும் கவனிக்கப் பட்டு வருகிறது.